<u>வின்டெல்ட்:</u> ஜனநாயக சர்க்காருடைய அமெரிக்க நாட்டிலே தேர்தல் மூலம் ஜனாதிபதி பதவி பெற்றாலும் தேசத்தின் சட்டசபைகளுக்கும் புறம்பான விசேஷ அதிகாரம் கொண்ட பதவி அது. பதவியாளருக்கும் நான்கு வருடகாலமும் ஜனாதிபதி ஒரு சர்வாதிகாரிதான். நிர்வாகத்திலே கூடச் சாதாரண மேல்தாவலாலேயே அந்த சர்க்கார் காரியதரிசிகளை தமக்கு வேண்டியவர்களாக மாற்றிக் கொண்டு அதிகாரம் செலுத்தும் உரிமை ஜனாதிபதிக்கு உண்டு. அவரது ஊழியத்தின் மதிப்பு மாதிரியாக வருடமொன்றுக்கு 75000 டாலரும், 25000 பிரயாண வசதிகளுக்கும் அளிக்கப்படுகிறது *

சர்க்கார் நம் எஜமானல்ல; அது மக்களால் தங்கள் சௌகரியத்திற்காக ஏற்படுத்திக் கொள்ளப்பட்ட ஸ்தாபனம். மக்களுக்கும் ஒரு சேவகனைப் பழகிக் கொள்ளும் தொடர்புதான் சர்க்காருக்குண்டு. சேவகன் வரம்பு மீறினால் தவறு வைத்தால், அதைக் கவிழ்த்துவிட்டு புது சர்க்காரை அமைக்கும் சக்தி மக்களுடையதாகிறது *

நியாயமான பேச்சு; அதிலே கண்டிப்பும் இனிமையும் கலந்திருக்கும். தீர்க்க திருஷ்டியுடன் வகுக்கும் திட்டங்கள், எந்த காரியத்தைச் சாதிக்க நேருவது என்றாலும், எல்லைகளையும் எதிர்த்து நின்று வெற்றி பெறும் உறுதியான நெஞ்சம், தீர்க்கமான நாவகசக்தி, இவ்வொன்றையும் நுணுக்கமாக ஆராயும் தன்மை, மக்களை உற்சாகப்படுத்தி வேலைவாங்கும் சக்தி, வாதத்திலும் மக்களை மயக்கும் திறமை — இவ்வளவும் வேண்டும் *

நிர்வாக சபைக்கு ஆதரவாகவும், சட்டமியற்றவும் காங்கிரஸ் என்ற பெயருள்ள இரண்டு சட்டசபைகள் இருக்கின்றன. ஒன்று செனட். மற்றது பிரதிநிதி சபை. ஒவ்வொரு மாகாணமும், செனட்டுக்கு இரண்டு பிரதிநிதியும், பிரதிநிதி சபைக்கு ஜன தொகையை ஆதாரமாகக் கொண்டு அமைந்த பிரதிநிதிகளையும் அனுப்புகிறது *

ஒவ்வொரு மனிதனும் சுகமாக வாழ உரிமை பெற்றிருக்கிறான். அதை மட்டான் தனத்தினாலோ குற்றத்தினாலோ அவன் வாழ்க்கையைச் சுகமாக அனுபவிக்காமல் இருக்கலாம். அதற்காக அவனுடைய வாழ்வை வீணாக்கி விடக்கூடாது *

சர்க்கார் மக்களுடைய உடைமை. அவர்களால் ஏற்படுத்தப்பட்ட ஸ்தாபனம் அது. நிரம்ப வேலை செய்யாவிட்டால் அதைக் கவிழ்த்துவிடும் உரிமை மக்களுக்குண்டு. சர்க்கார் மக்களின் ஊழியன். அவர்களை ஆட்டுவைக்கும் எஜமானல்ல *

உலகில் போர் நடப்பது அரசியல் காரணங்களால்தான்; வியாபார வேட்டையாலும் தான். உலகில் வல்லரசுகள் என்று சில நாடுகளும், வியாபாரக் கடைகள் என்று சில நாடுகளும் இருந்தால் மீண்டும் போர் நிகழ்தல் செய்யும். * *

<u>C.R.</u>

"காங்கிரஸ் வெறும் கட்சி ஸ்தாபனம் மட்டுமல்ல; அது ஜனநாயகத் தன்மை வாய்ந்த தேசிய ஸ்தாபனமாகும். கமிட்டியால் தீர்மானங்களாக வெளிவந்துள்ள சில கருத்துக்களை மாற்றிக் கொள்ளும்படி, ஒருவர் பிரசாரம் செய்வதைத் தடுக்க முடியாது. காங்கிரஸை அதன் தற்போதைய திட்டத்திலிருந்து மாற்றுவதற்கு எனக்கு பரிபூரண சுதந்திரம் இருக்கிறது". * *